முற்பக்கத் தொடர்: வேண்டுமென்று இந்திய சர்க்காரை வற்புறுத்தல். ஏழை விவசாயிகளுக்கு சாதகமாக ஏற்படும் வகையில் தற்போதுள்ள கொள்கையை மாற்றி திருத்தியமைப்பது; கிராமங்களுக்கு வேண்டிய அளவு தானியங்களை வட்ட வட்ட பெரிய உற்பத்தியாளரிடமிருந்தும் விளைச்சலான் தாராளமாகத் தும் உபரிதானியத்தைச் சேகரிப்பது. கொள்முதலுக்கு நியாயமான விலையை நிர்ணயிப்பது; ஜனங்களுக்கு உணவு தானிய போக்கு வரத்துகள் மீதுள்ள அநாவசியக் கட்டுப்பாடுகளை நீக்குவது; உடன் கண்டும் பற்றாக்குறை பிரதேசங்களிலும் ரேஷன் குறையை நிறைப்பது, தற்போதுள்ள அரசு ரேஷனிங் அதிக அளவு உயர்த்த நடவடிக்கைகள் எடுத்துக் கொள்வது; அவசியமான இடங்களில் நியாய விலைக் கடைகளை ஏற்படுத்துவது; தேசியக் கைத்தொழில் அபிவிருத்தி அடையும் பொருட்டு தொழில் முன்னேற்றம் அடைந்துள்ள நாடுகளுடன் வியாபார ஒப்பந்தம் செய்துக் கொள்ளும்படி இந்திய சர்க்காரை வற்புறுத்துதல்; நெசவாளருக்குப் போதிய அளவு நூல் கிடைக்கும்படி செய்து நூல் பஞ்சத்தைத் தீர்ப்பது; கைத்தறி நெசவாளர் கூட்டுறவு சங்கங்கள் மூலமாக நூல் வினியோகம் செய்வது; 0✱0

மொழிவாரி மாகாணங்கள்:- தற்போதுள்ள சென்னை ராஜ்யத்தைக் கொண்டு மொழிவாரி மாகாணங்கள் அமைப்பது. திருவாங்கூர்-கொச்சியில் ராஜ பரம்பரை ஆட்சியையும், ஹைதராபாத்தில் நிஜாம் ஆட்சியையும், மைசூரில் மகாராஜா ஆட்சியையும் ஒழிக்க சட்டம் ஏற்படுத்துவது. தமிழர், கன்னடியர், தெலுங்கர், மராத்தியர் ஆகியவர்க்கு அவரவர்களுடைய தாயகங்களில் வாழ வகை செய்வது; மக்களின் அபிப்ராயத்தைக் கொண்டு எல்லை நிர்ணயம் செய்வது; எல்லை சம்பந்தமான உரிமைகளும் தகராறுகளும் ஒரு கமிஷனால் தீர்க்கப்படும். 0✱0

ஆட்சி மொழி:- பெரும்பான்மை மக்களால் பேசப்படும் மொழி ஆட்சி மொழியாக இருக்கும்; ஒவ்வொரு ராஜ்யங்களின் மைனாரிட்டியோர் மொழிகளுக்கு பாதுகாப்பு அளிக்கப்படும்; தாய்மொழியால் கல்வி பெற வசதியளிப்பது; பிற்பட்ட வகுப்பினருக்கும் ஹரிஜனங்களுக்கும் போதிய கல்வி வசதியளிப்பது; சிறுபான்மை மதத்தினருக்கு பாதுகாப்பு அளித்து, மத வழிபாட்டுக்கு சுதந்திரம் அளிப்பது. 0✱0

உரிமைகள்: ராஜப்பிரமுகர் முறையை ஒழிக்கும்படி மத்திய சர்க்காரை வற்புறுத்துவது; ராஜ்யங்களுக்கு கொடுக்கப்படும் வருமானவரி பங்கை அதிகரிக்கும்படி கோருவது. கவர்னரை நியமனம் செய்யாது ராஜ்ய மக்களால் தேர்ந்தெடுக்கப்பட வேண்டிய வகையில் முறையாக சட்டத்தைத் திருத்தும்படி பார்லிமெண்டையும் அரசாங்கத்தையும் வற்புறுத்துவது; ராஜ்ய நிர்வாகத்தில் தலையிட ஜனாதிபதிக்குள்ள அதிகாரத்தை ரத்து செய்வது; அல்லது குறைப்பது; ராஜ்ய சர்க்காரின் சுய அதிகார வரம்பை மேலும் விஸ்தரிப்பது. மதுவிலக்கு திட்டக் கொள்கையை புனர் பரிசீலனை செய்வது 0✱0 தினமணி 15-2-52: 0✱0